# 8
# பள்ளத்தாக்கு

**ஷ**வரிலிருந்து பூவாய் நீர்! எவ்வளவு நேரம்தான் குளிப்பது. மேலே வெண்டிலேட்டரில் சிட்டுக்குருவி ஒன்று உட்கார்ந்து அவளை ஒருமுறை, வெளி உலகை ஒருமுறை சிடுக் சிடுக்கென்று பார்த்தபடி பயமில்லாமல் கீச்சிடுகிறது.

குளியலில் உடல் சுகிக்கிறதா? உடலில் உஷ்ணம் பரவுகிறது மைதிலிக்குத் தெரியத்தான் செய்கிறது. உஸ்ஸென்ற ஷவரின் மிருதுவான சப்தம். உடலில் தெறித்து வைரங்களாய்ச் சிதறுகிற பூ நீரில் வானத்து வில் குளியலறை உள்ளே வீசுகிற வெயிலின் வீச்சில் விரிகிறது.

வழியும் நீரில் மைதிலியின் உடல்தான் எத்தனை அழகு.

ஞாயிறு - வேலையில்லை. இருந்தாலும் பிடிப்பதில்லை. மைதிலிக்கு ஞாயிறு ஒரு பள்ளத்தாக்குக்குள்ளேதான்.

சீனிவாசபுரம் ஊர்க்கோடி எக்ஸ்டென்ஷன். அதிலும் கிரிரோடு கடைசி மூலை. அதிலும் மைதிலியின் ஃப்ளாட் கடைசியோ கடைசி. சிறிய பங்களா மாதிரி சுற்றிலும் லான்.

சற்றே நீளவாக்கில் அமைந்த போர்ட்டிகோ. சிறிய கேஸில் ஃபியட் கார் - நீலநிறம் பளிச்சென்று. அரசினர் கலைத்தொழில் நிறுவனத்தின் டைரக்டர் மைதிலி என்ற பித்தளை போர்டு முன்னே!

வீட்டுக்குள்ளே வேறு மனிதர்கள் கிடையாது. காம்பவுண்டுச் சுவருக்கு அப்பால் புதாறு ஓடுகிறது. அதற்கு அப்பால் ராஜராஜசோழன் காலத்து அகழி. அதற்குள் ஓடுகிற புதாற்று நீர்.

முதன் முதலில் மைதிலியை இந்த வீடு வாங்கிக் கொடுத்த புரோக்கர் தம்புச்சாமி சந்தித்தபோது பயம்தான்...

...''வீடு பள்ளத்தாக்குல இருக்கணும்.''

தம்புச்சாமிக்குப் புரிய நியாயமில்லை. ''பள்ளத்தாக்காவுது?...''

''தனிய்ய இருக்கணும் வீடு. அதான் அப்படிச் சொல்லீட்டேன். இங்கே ஏது பள்ளத்தாக்கு... ல்லெ?''

''அதுமாதரீல ஒரு வீடு இருக்கு புதாத்து சரிவுல!''

''எங்கே?''

''ஊர்க்கோடி. சீனுவாசபுரம், ஆத்துக்கு அந்தப்புறம். யாரும் அண்டமாட்டாங்களேம்மா. காடுமாதிரி சுத்தி... பயமா்யிருக்குமே. நீங்க ஒண்டி ஆளு...''

''கூடதான் 'ஸ்யூப்' இருக்கே.''

''நாயிதானேங்க. ஒரே அமுக்கு அமுக்கீட்டாங்கன்னா...?''

கலகலவென்று சிரித்தாள் அவள்...

...ஷவரில் நூறு துளைகள் இருக்குமா? உடல் உஷ்ணம் பெருகுவது மைதிலிக்கு ஆச்சரியம். நரம்பில் இனந் தெரியாத மகிழ்ச்சி. வெண்ணிற சலவைக் கற்கள் தேர்ந்தெடுத்ததுகூட அவள் ரசனைதான். ஆனால் இப்போது அவை வெண்ணிறமாய் இல்லை. வெண்மையே ஒரு புது நிறமாய் காலம் கலந்து க்ரீம் தடவியிருக்கிறது அதற்கு. தம்புச்சாமியுடன் வந்து பார்த்த போது காம்பவுண்டுக்குள் வீடே காணோம். உயரமாய் மரங்களின் பசுமை. அவளுக்கு ஆச்சர்யம்! தம்புச் சாமி இத்தனை தெரிந்தவனா? இடமும் வீடும் அவளைச் சந்தோஷப்படுத்தின.

லாரியில் சாமான்கள் வந்து இறங்கியபோது எல்லாருக்கும் ஆச்சரியம், அட, இந்த காட்டு பங்களாவுக்கும் கூட ஒரு பேய் வந்திருக்கே என்று. தெருவாசிகள் வந்து பார்த்துவிட்டுப் போனார்கள். பெண்கள் எல்லாருக்கும் ஆச்சரியம். 'தனியா இவ இஞ்ச இருக்கப் போறாளாம்ல்ல...' முனகிக்கொண்டார்கள்.

வீட்டுக்குள்ளே சமையலறையில் எல்லா வசதியும் இருந்தும் சமையலுக்கு ஆள் கிடையாது. நாளின் பெரும் பாலான நேரம் வீட்டில் யாரும் இருக்க மாட்டார்கள். அதனால்தான் வாசலில் ராமசாமி! வேலைதான் மைதிலிக்கு ஊன்றுகோல். வேலை மட்டும் இல்லாவிட்டால்...

ஞாயிறுதான் பள்ளத்தாக்கில் அவள் சுகிக்கிற நாள். யாரையும் பார்க்கமாட்டாள். எங்கும் போகமாட்டாள்.

மாடியில் நின்று அகழிக்குள் ஓடும் காவிரி நீரைப் பார்த்துக்கொண்டே முடியை உலர்த்துவது காலை நேரச் சுகம். பகல்வேளை முழுவதும் பள்ளத்தாக்கில் திரிவது. எத்தனைவித பூச்செடிகள், கனவுகள் இந்தப் பள்ளத்தாக்கில், வெயிலேறும் வேளையில் பசி வரும். அடுக்களை அமந்து கிடக்கும். மெத்தையில் கிடப்பாள். ஒவ்வொரு நிமிஷமும் நகரும், இழையும். மாலையாகும் - பசி கனக்கும். மெதுவாய் கீழிறங்கி வருவாள். கிச்சன் உயிர்க்கும்.

டெரியருடன் கொஞ்சநேரம் விளையாட்டு. ஸ்யூப்கூட அவள் விளையாட்டுக்குப் புரண்டு எழும்பும்.

தெருவில் விளக்குகள் எரியும்.

ஷவரில் பசியோடு குளியல்.

சாப்பிட வேண்டுமா? - இத்தனை பசிக்குப் பிறகும் யோசனையாய் இருக்கும்.

லாமினேட்டட் மேஜைப் பரப்பில் ஆவி பறக்கும் சூப்! வத்தக்குழம்பு! நெய்! புட்டிங்! சம்பந்தமில்லாத ருசிகள்! இஷ்டம்போல் கொறித்துத் தள்ளுவாள். ஒருத்திக்குச் சமைத்தது.

சூப்பும் வத்தக்குழம்பும் புட்டிங்கும் இல்லாவிட்டால் ஸாண்ட்விச்சும் ரசமும்!

விபரீதம்.

காலை நீட்டிப் போட்டுக்கொண்டு மாடியில் டிவி. பார்த்தபடி ஸ்யூபிடம் கொஞ்ச நேரம் விளையாடுவாள். ஸ்லீப்பிங் கவுன் போட்டுக்கொண்டு மாடி வராண்டாவில் நடப்பாள். இருட்டுக்குள் அவள் நிற்பது கேட்டருகில் சென்ட்ரி ராமசாமிக்குத் தெரியும். வெகுநேரம் இருட்டில் இருப்பதும் புரியும். ஏன் என்றுதான் தெரியாது, அவளுக்கும்!

*

மைதிலி ஆபீசராய் நுழையும் ஆபீஸ்கள் ரொம்ப சிரமப்படும். அமைதி யாரையும் பயப்படுத்தும். என்ன செய்வாள் என்பதே யாராலும் யூகிக்கமுடியாது. ரொம்ப கண்டிப்பு. எல்லாம் கருக்காய் நறுக்காய் செயல்பட வேண்டும் அவளுக்கு. அவளுக்கே அது பிடிக்காத ஒன்றுதான்.

மனிதர்களில் அதிகாரிகள் தனி ஜாதி. அவளும் அப்படியே.

வாரத்தில் ஆறு நாட்களும் இதே முறுக்கில் முறுக்கும் அவளுக்கு ஏழாம் நாள் தறிகெட்டுப் பாயும் நாள். விடிந்து பதினோரு மணிவரை சில ஞாயிறுகள் அவளை எழுப்பாது அதுவும் தூங்கும். சில ஞாயிறுகள் பள்ளத்தாக்கிலேயே முழுகிப்போகும். மைதிலி படுக்கையில் புரண்டுகொண்டே கிடப்பாள். கீழே ஸ்யூபின் கத்தல் தொடர்ந்து பசியில் கேட்கும்.

கண்ணாடி ரொம்ப அழகாய் இருந்தது. சுற்றிலும் சித்திர வேலை. கண்ணாடியில் அவள் அவளை அப்படியே பார்த்து நின்றாள். மைதிலிக்கு இருபத்திரண்டு என்று சொல்லமுடியுமா? சிற்பம்போல் அவளை அங்கம் அங்கமாய்ப் பார்த்து பயந்தாள். எங்கும் பரிசுத்தம். ஒரு மச்சமில்லை. மார்பிளில் செதுக்கியது போன்ற கனவு.

ஹாலில் ஸ்யூப் குரைக்கும் சப்தம் கேட்டதும் டர்க்கி டவலைச் சுற்றிக் கொண்டாள். மறுபடியும் ஸ்யூபின் குரைப்பு.

மூக்கின் நுனியில் திரண்ட ஒரு துளி தண்ணீர் அங்கேயே சொட்டாமல் நின்றது.

கண்ணாடியை நெருங்கி பரிசோதனையைத் தொடங்கினாள் மைதிலி.

ஞாயிற்றுக்கிழமை கண்ணாடிக்குள்ளிருந்து கண் சிமிட்டியது. ஹாலில் ஸ்யூப் ஓடி விளையாடுவது புரிந்தது. யார் வந்திருக்கிறார்கள்? யாரும் கசப்பாய் இருந்தார்கள்! இன்று யாரையும் பார்ப்பதில்லை. எப்படி விட்டான் ராமசாமி?

ட்ரெஸ்ஸிங் டேபிளில் பத்து நிமிடம்... ப்ரா, பெட்டிகோட்... ஸாரி... சிறை, சிறை, சிறை. ரூஜ்... ஸ்நோ... லேசாக கண்ணில் மை. இன்று லிப்ஸ்டிக் வேண்டாம். பட்டுப்புடவையும் நீலநிறமும் ஜரிகையும் ரொம்ப இதமாய் இருக்கிறது. ஒரு அடுக்கு வளையல் ஜரிகையோடு போட்டி.

ஹாலில் யாரோ... ஸ்பூப் மறுபடியும் உர் உர் என்று உறுமும் சப்தம்.

மூக்கு நுனியில் கோபம் வந்தது மைதிலிக்கு! புரிந்துவிட்டது. யாரோ ஒருவன்! அப்பா அனுப்பியவன்!

அப்பா! மைதிலிக்கு தன்மேல் ஒரு கூண்டு படர்ந்து மூடியது போலிருந்தது. மாடிப்படியில் கம்பீரமாய்க் கீழிறங்கும்போதும் ஒரு தலையிறக்கம்.

மைதிலி கீழிறங்கி நின்று வந்தவனை அலட்சியமாய்ப் பார்த்தாள். வந்தவனிடம் என்ன கண்டோ உறுமியபடி வாலாட்டியது ஸ்பூப்! விரும்பிய வெறுப்பா? எஜமானி நோக்கம் புரியாத வெறுப்பா?

''எஸ்!''

''ஐயம் ஸ்ரீனிவாச கோபாலன். உங்கப்பா அனுப்பிச்சார். ஐயம் வர்க்கிங் இன் பெல்! எலக்ட்ரிக் எஞ்சினியர். வயது முப்பது. கௌண்டில்ய கோத்ரம்...''

புழு! நெளிகிறது! அப்பா அனுப்பிய புழு! இவனெல்லாம் என்ன மனுஷன்!

''எஸ்! ப்ளீஸ் ஸிட்டவுன்!''

நல்ல களையான முகம்தான். சிவப்பு. அலையான முடி முன் நெற்றியில். கருகருவென்று மீசை. கூர்த்த நாசி. நிஜமாகவே உபயோகமான ஜாதகம். பயந்த பையனாய் வேறு இருக்கிறான். போதுமே அப்பாவுக்கும்! ஆபீசில் 'ஐ லவ் யூ' சொன்ன ஜெயகரை நினைத்துக் கொண்டாள். ஸ்பார்க்கிங் பர்சனாலிடி! திறந்த காலர் வழியே அவன் மாதிரி... ம்... ஆனாலும் அப்போதும் இவனைப் பார்க்கிறபோது ஏற்படும் இதே அருவெறுப்புதான்! புழுக்கள்!

எந்த ஆணிடமுமே ஒரு புழுத்தனம் இருக்கிறது. இந்த வயதில் - ஈரமாய் அருவெறுப்பாய் நெளிகிறது. ஒரு நாள் ஜெயகர் கேட்டானே அது மைதிலியை கிரீடம் வைத்து சிம்மாசனத்தில் ஏற்றியது. மகிழ்ந்து மயங்கியது எல்லாம் அவளைப் பொறுத்தவரை உண்மை. அப்படியே தன்னை அணைத்துப் புரள மாட்டானா என்று ஒரே ஒரு கணம் ஏங்கினாள் என்பதும் உண்மை. ஆனால் அடுத்த கணமே ஈசல் புழுவாய் நெளிந்தானே அது? சற்று தளர்ந்தாலே போதும்.

கை கழுவ பேஸின்கிட்ட போனப்போ கிஸ் பண்ண வந்த ராஸ்கல்! நீ! கிஸ் பண்ண வந்தது தப்புன்னு உடனே கால்ல விழுந்தியே நீ புழு இல்லாமெ என்ன!

இதுக்கு மிந்தி அப்பாவும்தான் எத்தனை புழுவெ அனுப்பிச்சுட்டார்! அவரும் ஒரு புழுதான்! இந்தப் புழு இன்னிக்கு வந்திருக்கு. நெளியிது.

அந்த கங்கூலி மட்டும்? அவனும் ஒரு வைப் மட்டும்தான் கேட்டான். ஆள் இல்லாத இடம் வந்ததும் ஒரு அமுக்கு! தம்புச்சாமி புரோக்கர்கூட அதையே சொன்னான் - நேரம் இருந்தா அவன் கூட ரெடிதான். 'இது'க்கு என்னை ஏண்டா கீழ போட்டு அமுக்கணும்? கங்கூலி கிட்டவந்து அமுக்கி உருவினப்போ மைதிலி கேட்டது அவளுக்கு இப்போதும் ஆச்சரியம்! இதெ ஏன் நீங்க வீட்ல ஒரு ஆம்பிளையா கம்பீரமா என்னெத் தூக்கி அணைச்சு ஆட்கொள்ள உனக்கு முடியலையே? மெதுவா தொட்டு, பயந்தா அணைச்சு,

வெக்கப் பட்டா துணிய உருவி, அதுக்குமேல நடுங்கினா, என்னை.... எல்லாம். அதுக்கப்புறம் வாழ்நாள் முழுதும் உன்னெ பூஜிக்கணும். எதிரேயும் அதே போல ஒரு ஆட்கொள்ளவந்த புருஷன். இப்ப மைதிலி வெக்கப்படணும், சிரிக்கணும், நாணணும்.

''எதுக்கு வந்திருக்கீங்க?''

''உங்கப்பா எழுதல்லியா?''

''அப்பாவா கல்யாணம் பண்ணிக்கப்போறா?''

''நீங்க ரொம்ப ரிஸர்வ்ட்ன்னுகூட எழுதியிருந்தார்!''

''ஒண்ணுக்கும் மசியமாட்டேன்னு அதுல எழுதல்லியா அவர்?''

புழு நெளிய ஆரம்பித்தது. குமட்டிக் கொண்டு வந்தது, மைதிலிக்கு. உங்களுக்கெல்லாம் பொண்ணா இந்த ஜாதியில இல்லெ? இதோ நடுங்க ஆரம்பிச்சுட்டெ. நான் நீ தேடிவந்த பாப்பாத்தி இல்லன்னு உனக்குப் புரியல்லியா? ஒரு வாஷிங் சோப் மாதிரி என்னெ நீ யூஸ் பண்ண முடியாதுன்னு உனக்குத் தெரிஞ்சும் கூட, மெதுவா ஒரு தடவை போட்டுப்பாத்தா என்னன்னு தோணுது, இல்லெ? நீ எவ்வளவு சம்பாதிச்சு எவ்வளவு வளந்து எத்தனை அழகாயிருந்தாத்தான் என்ன! நான் இருக்கிற பள்ளத்தாக்குக்குள்ளே இறங்கி வந்து என்னெத் தொட உன்னால முடியாது.

அவன் எழுந்துவிட்டான். இது முதல் அல்ல. மைதிலி பின்னால் ஸாரி சொல்லவில்லை. நெஞ்சு வலித்தது.

அவன் பின்னாலேயே நடந்து வெளியே வந்தாள். இரண்டு மூன்று முறை திரும்பிப் பார்த்துவிட்டு கேட்டைக் கடந்து வெளியேறினான் அந்த எஞ்சினியர்.

அப்பா இவனையே கூட்டிக் கொண்டுவந்து மணவறையில் கட்டுடா இவ கழுத்திலெ தாலியென்னு சொன்ன எந்த வலியுமில்லாமல் இந்தப் புழுவைக் கட்டிக்க மைதிலி சம்மதிச்சுடுவா. அவளுக்கும் அது பொருந்தும். ஆனா, அப்பா தந்து வளர்த்த சுதந்திரம் இருக்கே அதுதான் அவளை ஆட்டிப் படைக்கிது.

போன மாதம் வந்தானே ஒத்தன் ராஜாமணின்னு - பேருகூட கதையில வர்றமாதிரி - ஆளும் வாட்டசாட்டம்! ரொம்ப தைர்யமா ''உன்னெப் பிடிச்சிருக்கு''ன்னான். அடுத்தா மாதிரி ''ஆமா தனியாவா இந்த வீட்ல இருக்கே? அம்மா, அப்பா எல்லாம் உன்னெ இப்புடி விட்டுவெச்சிருக்காளே குண்டுக்காளை மாதிரி! நீ ரொம்ப இண்டிவிஜுவல்ன்னு கேள்விப் பட்டேன். எனக்கு ஜாதகம் பொருந்தியிருந்தாப் போறும். மத்ததெல்லாம் அட்ஜெஸ்ட் பண்ணிக்கலாம்.''

''எதெ எதெ அட்ஜஸ்ப் பண்ணிப்பேள்?''

''நீ ஒரு மாதிரின்னு சொன்னா. அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்.''

''ஒரு மாதிரின்னா... வந்து...''

''நீ நல்லா படிச்சிருக்கெ. நல்ல வேலை, சம்பளம். நன்னாவும் இருக்கே - 'இதெ'ல்லாம் சகஜம்.''

''எது?'' ஆத்திரம் அவளுக்கு உச்சந்தலை முடியில் உறைத்தது.

''அடங்கமாட்டியாம். அதுனால என்ன?''

-அட புழுவே! நான் என்ன ஜல்லிக்கட்டு மாடா?

''ஏன் மிஸ்டர் ராஜாமணி. இப்ப உங்களை செருப்பால் அடிச்சாக்கூட பேசாம இருந்துடுவேளா என்ன?''

''ஷட்டப்!'' சீறினான் அவன்.

''கெட் லாஸ்ட்'' அலறினாள் மைதிலி. சென்ட்ரி ராமசாமி ஓடிவந்தான்.

*

பதினேழாவது வயதில் டைப்பிங் இன்ஸ்டிடியூட் போய்க்கொண்டிருந்த வேளை அந்த மலையாளத்துப் பையன் தங்கப்பன் ஆசாரி அவளை சினிமாவுக்குக் கூட்டிக்கொண்டு போக அனுமதித்து இருட்டில் விரல்களால் அவன் காட்டிய சொர்க்கம்தான் மீதி! ஆசாரி மூத்தவன். வீட்டுக்குத் தினம் வருபவன்.

அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இது தெரியுமா? தங்கப்பன் ஆசாரியா. ரொம்ப நல்லவனாச்சே. மைதிலிக்கு ஒரு இரண்டே நாள் சினிமாவில் இந்தச் சுகம் எவ்வளவு தூரம் என்று தெரிந்து போய்விட்டது! மூன்றாம் முறை தங்கப்பன் ஆசாரி அவள் உடம்பில் சிற்பம் செதுக்க முடியவில்லை. ஏன், ஏன் என்று நெளிந்தது அந்தப் புழு! பதினேழாம் வயதில் செதுக்கிய சிற்பம்தான் அவள். அதன்பின் அந்தச் சிற்பம் மூளியாகவே இருக்கிறது இறுகிய கல்லாய்.

மூன்றாம் நாள் ஆசாரி அவளிடம் சிரித்ததெல்லாம் பலிக்கவில்லை. கல்லாய் இறுகியிருந்தாள் மைதிலி. மெதுவாய் இழுத்துப் புதைத்தான் தங்கப்பன் ஆசாரி. பலவந்தமாகவே திறந்தான். பிணம் மாதிரி இருந்தாள்.

''இனிமே முடியாது, என்னெ விடு! சீ! விடு! த்தூ!'' -அவளுக்குப் பளீரென்று எல்லாம் புரிந்தது.

உள்ளே இருக்கிறது வேண்டாம் இவன்களுக்கு. இது போதும்.

''என்னெ கல்யாணம் பண்ணிப்பியா தங்கப்பன்?''

''கல்யாணமோ? நின்னெயோ? எனிக்கு மும்பெ விவாகமாயிப் போயல்லொ!''

அப்போதும்கூட அவன் இடையில் கையை வளைத்து என்னவோ தடவிக்கொண்டுதான் இருந்தான். புழுப்போல அருவெறுப்பாய் இருந்தது. அன்றுதான் குமட்டியது. வியர்த்து ஜில்லிட்டது. அரை இருட்டு சினிமாவிலிருந்து அவள் எப்போது எழுந்துவந்தாள் என்று அவளுக்கே தெரியாது.

முதல்முதலில் அப்பாவிடம் மறுத்ததும் இதே அருவெறுப்பில்தான்.

''ஏன் அவனை வாண்டாங்கறே? இவன் நல்ல காசுக்காரன்!''

''அவன் ஒரு புழு!''

''தட்ஸ் ஆல் ரைட். வேற வரன் பாப்போம்! இப்டியே தள்ளிப் போயிண்டிருந்தியானா அப்றம் வரனே வராது. இப்பையே உன்னெப் பத்தி ஒரு மாதிரின்னு பேசிக்கறா. அம்மா இல்லாத பொண்! தடிச்சியா வளத்திருக்கான் அப்படின்னு!''

''நீ ஒருத்தனெ கொண்டுவந்து இவனெத்தான் கட்டிக்கோடீன்னு சொல்லீடேம்ப்பா!''

''நோ! நான் உனக்கு எத்தனை சுதந்திரம் குடுத்து வளத்திருக்கேன். யூ மஸ்ட் சூஸ் யுவர் ஹஸ்பண்ட்... யூ நோ.''

சின்ன வயசில் அப்பா கேட்பார் -''ஏண்டி சாக்லட் ஐஸ்க்ரீம் வேணுமா? பிஸ்தா ஐஸ்க்ரீம் வேணுமா?'' அவளுக்கு ஐஸ்க்ரீம் ரொம்ப பிடித்தது. நீண்ட கண்ணாடிப் பெட்டி தொட்டி தொட்டியாப் ஐஸ்க்ரீம் நுரைத்துக் கொண்டு. பல நிறங்களில் பல மணங்களில்! சாக்லட்டும் பிடிக்கும், பிஸ்தாவும் ருசியாய் இருக்கும், வனிலாவும் மணக்கும். நினைவில் பல ருசி! திகைத்து நிற்பாள்! எல்லாமே வேணும்! சொல்ல அப்போது முடிந்தது!

ஆர். ப்ருகதீச்வரன் எம்.ஏ.,பிஎச்.டி.பிஸிக்ஸ் புரொபசர். திக்கான மூக்குக் கண்ணாடி. சினிமாவில் வருகிற அப்பா கதாபாத்திரம் மாதிரி இருந்தான். வயசு கொஞ்சம். ஊட்டம். பெரிய இடத்து சம்பந்தம். நல்லா சாப்பிடுவான் போலிருந்தது. பெண்பார்க்கும் படலம், சொஜ்ஜி பஜ்ஜி, பாட்டு எல்லாம் நடந்தது.

''பிடிச்சிருக்கோடி நோக்கு?''

''உனக்குப் பிடிச்சிருக்காப்பா?''

''ம்! பீமன் மாதிரியிருக்கான் பையன்! புரொபசரா யிருக்கானே, சம்பளம் ஆயிரம் இருக்காது?''

''அட! பிடிச்சிருக்கா?''

''ம்!''

''உன்னாலேயே ஒரு முடிவுக்கு வர முடியலையே? நான் மாத்திரம் எப்படி உடனே 'சரி' சொல்ல. ஆனாக்கூட நீ சொல்லிப்பாரேன். சரீன்னுடுவேன் ம்! உனக்குப் பயம் இப்ப கட்டிவெச்சுட்டு அப்பறம் அழும்போது நாம் பொறுப்பாய்டு வோமேன்னுட்டு!''

இன்னொரு நாள் அப்பாப் புழு இப்படியும் நெளிஞ்சதே.

''ஏண்டி மைதிலி எவ்வளவு படிச்சிருக்கெ! நன்னாப் பாடுவெ! ஒரு பயலை நீ லவ் பண்ணனும்னு தோணினதில்லை?''

''அப்பா, இப்டீல்லாம் கேள்வி கேழ்க்கலாமோ?''

''ஏன், அதுல என்ன தப்புன்னேன்!''

மைதிக்கு ஒரு கணம் மனசு நிறைந்து போயிற்று. ''இப்படிக்கூட பேசுவாளா என்ன?'' என்று கடிந்து கொண்டாள் அப்பாவை. ஒரே ஒரு கணம்தான் இந்த சந்தோஷமே அப்புறம்தான் இருக்கு.

''லவ் பண்றதுல தப்பு இல்லெ! ஆனா நம்மளவாளா இருக்கணும் கோத்திரமறிஞ்சு பொண்ணைக் குடுன்னு பெரிவா சொல்லீருக்காளே! அவா அவா இஷ்டம்போலத்தான் மனுஷ்யா இருக்கணும். ஆனா ஜாக்ரதையா இருக்க வேண்டாமோ?''

அப்பா புழு அல்லாமல் என்ன? இல்லாமலா அம்மாவைப் பிழிஞ்சு எடுத்திருக்கார்! அம்மா ஒரு அடங்கின சரக்கு. வார்த்தை போதும், சுருண்டு விழுவாள். அப்பாவும் ஆட்டி உலுக்கித்தான் எடுப்பார். சீக்கிரமே தாலியை அவர் கையில் அவிழ்த்துப் போட்டு வைகுந்தவாசம் போய்விட்டாள். இருமி இருமி ரத்தம் கக்கினது பயங்கரமாய் ஞாபகம் இருக்கிறது. பத்து வயசு மைதிலி அவள்.

ஏன் எவனையாவது கட்டிக்கணும்? கல்யாணம்தான் முக்கியமான பிரச்சனையா ஒருத்திக்கு? எத்தனை ஜனம் சாகிறது? தினம் பசியில் எத்தனை போகிறது? அப்பாவுக்கு முன் எவனையாவது ஒருத்தனை...

''அப்பா, நம்ப சாரங்கன் இப்ப எங்கே இருக்கான்?''

''அட! அவனெயா பண்ணிக்கணும்ங்கறே?''

''எவனையாவது ஒருத்தனெ பண்ணிண்டா என்னப்பா?''

விசித்திரமாய் மைதிலியைப் பார்த்தார் அவர். அறுபது வயசு. இன்னும் கட்டுவிடவில்லை. பழம் மாதிரி தளதளப்பு. அவள் கண்கள் நிறைந்தன. அவருக்குப் பயமாய் இருந்தது. மைதிலி லேசில் அழுகிற பெண் அல்ல.

நிறைய சம்பாதித்தாயிற்று அவரும். இனி மீதம் இருப்பது அவள். அவருக்கும் அவள் ஆகாமல் போய்விட்டாள்!

கோபாலன் ஆபீசில் முதலில் சந்தித்ததுமே அவளிடம் கேட்டான்.

''உங்களுக்குக் கல்யாணமான மாதிரி தெரியலியே!''

கோபாலன் புதுசா வந்த அக்கவுண்டன்ட். ரொம்ப நவீனமா இருந்தான். ''ஐ லவ் யூ'' சொல்லப்போறானா?

மைதிலிக்கு யார் ஐ லவ் யூ சொன்னாலும் பிடிக்கமாட்டேங்கிது. எவ்வளவு பெரிய பொய்! லவ் பண்றவன் சொல்லிகிட்டு நிப்பானா? அதுக்கு என்ன பெரிய சந்தோஷம்? அவளால யாரையாவது லவ் பண்ண முடியும்னு தோணலை.

''கல்யாணம் உங்களுக்கு ஆய்டுத்தா?'' - மறுபடி கேட்டாள் மைதிலி.

''ஏன் கேக்கறீங்க?''

''ஜாதகம் தரலாமேன்னுதான்!'' - சிரித்தாள்.

கேலியாக இப்படிச் சொன்னாள். கோபாலன் தினமும் சந்தித்து சிரித்தான். கூடவே நிறைய நேரம் கழித்தான். கடைசியாக மைதிலியின் அப்பா தான் ஜாதகம் கேட்டார் அவனிடம்.

மறுநாளே ஆபீசில் யாரும் இல்லாத வேளையில்-

''உங்கப்பா ஜாதகம் கேட்டார்!''- சிரித்துக் கொண்டான்.

கோபாலனைப் பிடிக்காமல் போகுமா? கீழ் உத்தியோகஸ்தன்தான். ஆனாலும் துருதுருப்பான சுபாவம். பார்க்கலாம்.

''ஜாதகம் கொடுத்தேளா?''

''உன்னோட பாங்க் பாலன்ஸ் எவ்வளவுன்னு உங்கப்பாவுக்கே தெரியாதாமே'' என்றான் கோபாலன்.

சட்டென்று சொடுங்கினள் மைதிலி. மூச்சு உள்வாங்கியது. ஆத்திரம்-உடல் பதறியது. பணத்தில் நெளிகிற புழு!

''பணம் எனக்கு முக்யமில்லெ. திருவியாத்துப் பொண்ணு லகாரம் ரெண்டு சொத்தோட வருதாம். அம்மா சொல்றா!''

மைதிலியின் அப்பா எத்தனை சுதந்திரம் தந்திருக்கிறார் அவளுக்கு! எல்லாம் எதுக்கு? இந்தப் புழுக்கள் கிட்டெ நெளியத்தானா! சம்பாதிக்க ஆரம்பிச்ச காலத்தில் முதல் சம்பளத்தெ அப்பாகிட்ட குடுத்து நமஸ்காரம் பண்ணினப்போ அப்பா என்ன சொன்னார். கண்கள் நிரம்பி வழிந்த அப்பா!

''நீயே வெச்சுக்கோடி குழந்தெ. உன் பணமா சேத்துவை! நிறைய புக்ஸ் படிக்கறவ நீ. நிறைய வாங்கு, படி! மிஸ்யூஸ் பண்ணமாட்டே நீ. அதோட நேக்குப் பணத்தெ சேக்கத் தெரியாது! அதெல்லாம் உங்கம்மா!''

சாரங்கன் மாமா பிள்ளை. ஒரு சிட்பண்ட் வெச்சிருக்கான். அவனை வேண்டாம் என்று அப்பா சொன்னதே கோபாலன் மாதிரி பணத்துக்கு பொண்டாட்டி பாக்கிறவன்ங்கிதனால்தான்!

''மிஸ்டர் கோபாலன்! உங்க பாங்க் பாலன்ஸ் என்ன? அதெச் சொல்லலியே நீங்க.''

பொண்ணுங்கிறவ இவங்களுக்கு ஒரு வசதிப் பொருள்!

''நான் ஒண்ணும் தப்பா சொல்லிடலியே மிஸ் மைதிலி!'' சட்டென்று எப்படி இவர்களால் இப்படிப் பின் வாங்க முடியாது!

அப்பா கேட்டார், ''இனிமே என்னடீ பொண்ணே பண்ணப் போறே?''

கோபாலன் இல்லென்னா ஒருத்தன்!

''யாரையானும் காட்டுப்பாம்-ன்னுடறேன்!''

''அதுதானே வாண்டாம்ங்கறேன்.''

அதுக்கப்புறம் எத்தனை ஜாதகம் அப்பா அனுப்பினார். அவளால் சுதந்திரத்திலிருந்து தப்பவே முடியலை.

ஆண்கள் அத்துபடியாகிப் போனார்கள் புழுக்களாய்! புழுக்களுடன் ஜீவிக்க முடியுமா?

புதாற்றுக்கரை! பழைய இடிபாடுகளுடன் ராஜராஜனின் பெரிய கோவில் மதில் எதிரே, எதிர்க்கரையின் சரிந்த பள்ளத்தில் சீனிவாசபுரத்து கோடியில் வீடு - ஸ்யூப் என்ற நாய் - காவல் ராமசாமி.

யாராவது துணை வேணும்தான். தெரியும். யாரும் வரமாட்டான். விலை கேட்பான். கூட வரமாட்டான். கூடமட்டும் இருட்டு கேட்பான். அதையும்

பயந்துகிட்டே தப்புமாதிரி அசிங்கமா கேட்பான். அப்பாவுக்கும் பின்னால அப்பா மாதிரியே கழுத்தை அறுப்பான் கல்யாணம் பண்ணு பண்ணுன்னு.

*

ஞாயிற்றுக்கிழமை காலண்டரிலிருந்து அவளைப் பார்த்துச் சிரித்தது. வெறும் மார்பிள் தரையில் சரிந்து உட்கார்ந்து கேஸட்டை ஆன் பண்ணினாள் மைதிலி. யாரோ தூரத்தில் சாரங்கி வாசித்தார்கள். கழுத்தை அறுத்துக் கொண்டு நெஞ்சில் பாய்ந்தது சாரங்கி தந்திகளின் தீம்கள். நெஞ்சில் இருந்த பயம் எழுந்து ஆடியது.

தூரத்தில் ஸ்யூப் அவளை மாதிரியே மொஸாய்க் தரையில் உருண்டு காலை நீட்டி நிமிர்த்தி திமிர்விட்டது. மல்லாந்து நாலு காலையும் மேலே நீட்டி உருண்டது. அவளுக்கு ரெண்டு கால்களே நாலு கால்கள்!

இப்போது நாலு கால் பிராணியாய் இருந்தாலே போதுமே, புழுவாய் பள்ளத்தாக்கில் நெளிய வேண்டாமே. நாய் ஸ்யூபுக்கு எப்போதும் சுதந்திரமில்லை. கஷ்டமுமில்லை. எப்போதும் விலங்குதான்! எப்போதும் உணவுதான். தேவைக்கு சுவரைத் தாண்டி தெருவை வலம் வரலாம். சுத்தலாம். நாய்களுடன் அலையலாம். எப்போதும் தூங்கலாம். எப்போதும் பாதுகாப்பு! எப்போதும் சங்கிலி!

சமையலறையில் போய் நின்றபோது பின்னிருந்து பத்து சாரங்கிகள் அழுதன. கப்போர்டைத் திறந்து எலுமிச்சம் பழங்களை எடுத்துப் பிழிந்தாள். அவளுக்கு அழுகை லேசில் வராது. இந்த ஞாயிற்றுக்கிழமைகூட அவளுக்கு மிச்சம் இராது. ஒரு தந்த டப்பாவை அலமாரியிலிருந்து எடுத்தாள். இதுவும் முதல் தடவையில்லை. அதில் இருந்த விதைகளை, இலைகளை மிக்ஸியின் போட்டாள். ஒரு ஸ்பூன் மிளகு, நாலு ஸ்பூன் கண்டன்ஸ்ட் மில்க், மேலும் கல்கண்டு, மிக்ஸி ஆக்ரோஷமாய்ச் சுழன்றது. தண்ணீர் ஊற்றியதும் நுரையுடன் பசுமையான இலைகள், விதைகள் எல்லாம் பாலுடன் சுழன்று சாம்பல் நிற திரவம் தயார்!

கண்ணாடி டம்ளர்கள் இரண்டு எடுத்து வைத்தாள். பசுமையான நிறத்தில் ரப்பர் ஷீட் துண்டு மேல் வைரம் போல் கண்ணாடி டம்ளர்கள் பரிசுத்தமாய் மினுங்கின.

'நோ, ஐயாம் நாட் அன் அடிக்ட்!'

மிக்ஸியிலிருந்து மைதிலி 'அதை' எடுத்து வடிகட்டியபடி கண்ணாடி டம்பளரில் அதை விட்டாள். கெட்டியான அந்தத் திரவம் அடர்ந்து இறங்கியது. பசுமை கலந்த சாம்பல் நிற பயங்கரம் நிரம்பியது. முதலில் இதை வடக்கே போயிருந்தபோது போபாலில் கற்றாள் மைதிலி. ரொம்ப நல்லதாம். பங்க்! மிளகின் உறைப்பும் இனிப்பின் கபடும் நிரம்பிய அபூர்வமான பானம்.

மைதிலிக்கும் ஒரு முடிவு வேண்டும். அவளுக்குத் தெரியும் அது வராது. இங்கே முகம் தெரியாத ஒருத்தனுடன் அல்லவா அது இணைந்திருக்கிறதாம்! அவன் எங்கேயாவது சுகிக்கட்டும். அவன் சுகத்துக்காக....இது.

பள்ளத்தாக்கு பெருமூச்சுவிட்டது. மிளகு அபூர்வமான உறைப்பு. பாலின் நைப்புடன் கெட்டியாய் குழம்பிய பானம். உள்ளே இனிப்பு இறங்க தொண்டையில் தீ பற்றி எரிகிறது; எரிக்கிறது. இது மோசமான பழக்கமாம்! சொன்னவன் எவன்?

மேலேயிருந்த பட்டுப்புடவையை அவிழ்த்து எறிந்தாள்.

முகம் தெரியாத அவன் வந்துவிட்டது புரிந்தது! பெட்டிக்கோட்! ப்ரா! சிறைகள்! சிறைகள்!

படுக்கையில் அவனுடன் சரிகிறாள். அணைக்கிறது ஆசாரியின் விரல்கள். சாரங்கனின் மூச்சு! முகந் தெரிய விழித்துப் பார்க்கிறாள் மைதிலி. வெறும் பச்சை உடம்பு! ஆண் உடம்பு! மலை மாதிரி தோள்கள். சிலை மாதிரி வயிறு. நரம்பு புடைக்கும் கரங்கள். இறுக அணைத்தும் முகம் தெரியவில்லை.

அவன் சொல்கிறான் ''வாடி!''

''எங்கே?'' அவளும் கேட்கிறாள். எங்கே?

முகம் தெரிகிறது. பவள உதடுகள் அவள் உதடுகளில் பதிந்து நைகின்றன. தொண்டையில், இறங்கிய தீ இப்போது வெஞ்சில் பற்றி திகுதிகுவென திரவ ரூபமாய் மார்பின் குமிழ்களில் எரிக்கிறது. படர்கிறது. உடலெங்கும் அனல். எங்கேயோ ஸ்யூபின் குரைப்பு கேட்கிறது.

அலை உச்சத்தில் வீசுகிறது. படகு துளைத்துப் போகிறது. கடல் பிளக்கிறது.

பள்ளத்தாக்கில் இப்போது வெளிச்சம்.

'பங்க்' அவளைச் சுழற்றி மேலேற்றுகிறது. உலகம் தெரிய மேலே உயர்கிறாள் மைதிலி. ஒரே நேரத்தில் கனவிலும் நனவிலும் வாழ முடிகிற சுழல்!

அவன் கேட்கிறான், ''மைதிலி என்னோட வந்துடறயா யாருக்கும் தெரியாமல்?''

'' எங்கே?''

''என் வீட்டுக்குத்தான்!''

''உங்க வீட்டுக்கா? அங்கே யாரெல்லாம் இருக்கா? உங்க முகம் பூரணமாத் தெரியல்லியே?''

''அது ஏண்டீ நோக்கு? நான் பிராம்மணன். கௌண்டியன்ய கோத்ரம். ஜாதகம் இதோ இருக்கு. பொருந்தணும். ரயில்வேய்ஸ்ல சீனியர் சூப்பரவைஸரா இருக்கேன். பேரு ரகு எம்.ஏ.''

''அட புழுவே!''

பள்ளத்தாக்கு இருளில் ஆழ்ந்து அவளை மூடிக் கொண்டது!

(குங்குமம் - 12.6.83)

